# குறள்நெறி

-குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்- *மின்னிதழ்:77 தை-18--தி.பி.2055 பெப்புருவரி-1-- பொ.ஆ.2024*



நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்








திராவிட மொழிநூல் ஞாயிறு

## பாவாணர் சிறப்பிதழ்

### பாவாணர் புகழ்போற்றிப் பல்லாண்டு

தாய்த்தமிழ்தான் முதன்மொழியாம்
மற்றெல்லாம் வழிமொழியாம்
வேர்ச்சொல்லை அடிப்படையாய்ப்
பார்ப்பவர்க்கே தெரியுமென்றே
ஆய்வென்னும் பாதையிலே
ஓய்வின்றி உழைத்ததனால்
ஆன்றவிந்த வேர்ச்சொல்லின்
அறிவியலை வகுத்தளித்தார்!
வாய்மொழியாம் சொற்களுக்கு
வேரறிந்து பேரறிந்து
வான்புகழும் நூல்களினை
வார்த்தேதான் பேர்கொண்டார்
வாய்த்திட்ட நல்லாய்வில்
நம்தமிழர் இன்னிசையை
வாழ்மணத்தை ஏற்றெழுதி
மாண்புடைய தீர்வானார்
சேய்போன்ற பன்மொழிக்குப்
பாலூட்டும் தமிழுக்கு
ஞாலத்தின் தாயென்றே
நற்றமிழில் பேர்வைத்தார்
பாய்ந்தோடும் ஆறாகத்
தமிழுணர்வின் ஊற்றான
பாவாணர் புகழ்போற்றிப்
பல்லாண்டு இசைப்போமே

*-முனைவர் தமிழ் இயலன், தமிழ்ப்பேராசிரியர்*
*அண்ணா பல்கலைக்கழகம்,சென்னை.*

## பாவாணர் தமது "திரவிடத்தாய்" என்னும் நூலுக்கு எழுதிய முகவுரை

உலக மொழிகளுள் தலைமையானவற்றுள் தமிழும் ஒன்றெனினும், பல்குழுவும் பாழ்செயும் உட்பகையும் தமிழகத்திலிருந்துகொண்டு, தமிழின் பெருமையைப் பிறநாடுகள் மட்டுமன்றித் தமிழ்நாடும் அறியாதபடி, அதனை மறைத்து வருவது மிக மிக இரங்கத்தக்கதொன்றாம். ஆராய்ச்சியாளரோ வெனின், ஓரிருவர் நீங்கலாகப் பிறரெல்லாம், பிறநாட்டுச் செய்திகளாயின் மறைந்த வுண்மையை வெளிப்படுத்துவதும், தமிழ்நாட்டுச் செய்திகளாயின் வெளிப்பட்ட வுண்மையை மறைத்து வைப்பதுமே தொழிலாகக் கொண்டுள்ளனர். ஆயினும், கார் காலத்தில் மறைக்கப்பட்ட கதிரவன் திடுமென ஒருநாள் திகழ்ந்து தோன்றுவதுபோல், தமிழும் ஒருநாள் உலகத்திற்கு வெளிப்படும் என்பதற்கு எட்டுணையும் ஐயமின்று.

தமிழே திரவிடத்தாய் என்பது மிகத் தெளிவாயிருப்பினும், 1891ஆம் ஆண்டிலேயே,

"கன்னடமும் களிதெலுங்கும் கவின்மலையா ளமுந்துளுவும்
உன்னுதரத் துதித்தெழுந்தே ஒன்றுபல ஆயிடினும்"

என்று பேராசிரியர் சுந்தரம் பிள்ளையவர்கள் திட்டமாய்க் கூறியிருப்பவும், ஆராய்ச்சியின்மையாலோ, கவலையின்மையாலோ, துணிவின்மையாலோ, தமிழ்ப்புலவர் எடுத்துக் காட்டாததினால், தமிழின் திரவிடத்தாய்மை பொதுமக்களால் அறியப்படாதிருப்பதுடன், தமிழ் ஒரு புன்சிறு புது மொழியினும் தாழ்வாகக் கருதப்படு கின்றது.

பெலுச்சித்தானத்திலும் வடஇந்தியாவிலும் இன்னும் திரவிட மொழிகள் வழங்குவதையும், வடநாட்டு ஆரிய மொழிகளிலும் திராவிட நெறிமுறைகளே அடிப்படையாய் அமைந்து கிடப்பதையும், குச்சரமும் (குசராத்தி), மராட்டியும் பண்டைக் காலத்தில் பஞ்சத் திராவிடிகளில் இரண்டாக வடமொழியாளராலேயே கொள்ளப்பட்டதையும், இந்தியமொழிகளிலெல்லாம் மூவிடப்பெயர்களும் முக்கியமான முறைப்பெயர்களும் தமிழ்ச் சொற்களாய் அல்லது தமிழ் வேரடிப் பிறந்தனவாயிருப்பதையும், சென்ற நூற்றாண்டில் தெலுங்கு நாட்டிற்கும் கன்னட நாட்டிற்கும் சென்ற தமிழ்க் குறவர் (எறுக்கலவாரு அல்லது கொரவரு) கூட, இன்று தமிழைத் தெலுங்கும் கன்னடமும் போல ஒலித்துப் பேசுவதையும், நோக்குமிடத்துத் தமிழிற் புணர்ச்சியும் பருசொன்னிலையும் தோன்றாத தொன்முது காலத்தில், தமிழே இந்தியா முழுதும் தனிப் பேராட்சி பெற்றிருந்தமை புலனாம்.

தட்ப வெப்ப நிலையினாலும், ஒலிமுறைச் சோம்பலினாலும், இலக்கிய விலக்கண அணைகரை யின்மையாலும், ஆரியக் கலப்பினாலும், தமிழர் விழிப்பின்மையாலும், நாவலந் தீவு முழுவதும் ஒருதனியாய் வழங்கிய முதுபழந்தமிழ், பல்வேறு மொழிகளாய்ப் பிரிந்து, வடநாட்டில் ஆரியமயமாயும் தென்னாட்டில் ஆரியக் கலப்பினதாயும் வேறுபட்டதுடன், ஆரியச்சார்பு மிக்க திராவிட மொழிகள் மேன்மேலும் தமிழை நெருக்கி நெருக்கித் தெற்கே தள்ளிக்கொண்டே வருகின்றன.

"நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமுந்
தமிழ்வரம் பறுத்த தண்புனல் நன்னாட்டு"
என்னும் இளங்கோவடிகள் கூற்றால், கி.பி.2ஆம் நூற்றாண்டு வரை வேங்கடத்தை வடவெல்லையாகக் கொண்ட தென்னாடு முழுதும் பிறமொழி வழங்காத தமிழ்நாடாயிருந்தமை புலனாம். ஆனால், 12ஆம் நூற்றாண்டில் சேரநாட்டின் வடபாகத்திற் கன்னடம் புகுந்துவிட்டது. இதை,

"வெள்ளா றதுவடக்கா மேற்குப் பெருவழியாம
தெள்ளார் புனற்கன்னி தெற்காகும் - உள்ளார
ஆண்ட கடல்கிழக்கா மைம்பத் தறுகாதம்
பாண்டிநாட் டெல்லைப் பதி."

"கடல்கிழக்குத் தெற்குக் கரைபொருவெள் ளாறு
குடதிசையிற் கோட்டைக் கரையாம் - வடதிசையில்
ஏணாட்டுப் பண்ணை யிருபத்து நாற்காதம்
சோணாட்டுக் கெல்லையெனச் சொல்."

"மேற்குப் பவளமலை வேங்கட நேர்வடக்காம்
ஆர்க்கு முவரி யணிகிழக்கு - பார்க்குளுயர்
தெற்குப் பினாகி திகழிருப தின்காதம்
நற்றொண்டை நாடெனவே நாட்டு."

"வடக்குத் திசைபழனி வான்கீழ்தென் காசி
குடக்குத் திசைகோழிக் கோடாம் - கடற்கரையின்
ஓரமோ தெற்காகு முள்ளெண் பதின்காதம்
சேரநாட் டெல்லையெனச் செப்பு"

என்னும் கம்பர் செய்யுட்களானறிக.

இற்றைநிலையிலோ, சேரநாட்டின் மேல்பாகம் முழுதும் மலையாள நாடாயும் கீழ்பாகத்தின் வடபகுதி கன்னட நாடாயும் மாறியிருப்பதுடன் சோழநாட்டின் வடமுனைப் பகுதி (தொண்டை நாட்டுப் பல்குன்றக் கோட்டம்) தெலுங்கிற் கிடந்தந்து இருமொழி நாடாய் வேறுபடுகின்றது.

உண்மையில் ஒரு பெருமையுமில்லாத புன்சிறு புது மொழிகளை யெல்லாம் அவ்வம் மொழியார் பலபடப் பாராட்டி வளர்த்து வருகையில், பல வகையில் தலைசிறந்த தனிப்பெருந் தாய்மொழியாகிய தமிழைத் தமிழர் நெகிழவிடுவதும், எங்கெழிலென் ஞாயிறெமக் கென்றிருப்பதும், தமிழப் பிறப்பிற்கு முற்றும் தகாத செய்தியாம்.

தமிழையும் பிற திரவிடமொழிகளையும் ஆராய்வதால் தமிழின் சிறப்பையும் பழந்தமிழரின் பெருமையையு மறிவதுடன், உலக முழுதுந் தழீஇய குலநூல் (ETHNOLOGY), வரலாற்றுநூல்

(HISTORY), மொழிநூல் (PHILOLOGY) ஆகிய முக்கலை களின் திறவுகோலையும் காணப் பெறுவதாயிருத்தலின், இனிமேலாயினுந் தமிழர் தம் கடமை யுணர்ந்து கடைப்பிடிப்பாராக.

எனது ஒப்பியன் மொழி நூலின் முதன் மடல் 3ஆம் பாகத்தின் பிற்பகுதி யாய் வெளிவரும் இந் நூல், தமிழே திரவிடத் தாய் என்று நாட்ட வெழுந்தது. இதை நடுவுநிலையாய்ப் படிப்பார்க்கெல்லாம் இவ்வுண்மை புலனாகுமென்பது திண்ணம். ஒரு மொழிக்கு அடிப்படையானவும் இன்றியமையாதனவுமான, மூவிடப் பெயர்கள், முறைப் பெயர்கள், தட்டுமுட்டுப் பெயர்கள், அக்கம்பக்கப் பொருட் பெயர்கள், பேரிடப் பெயர்கள், வா, போ முதலிய முக்கிய வினைகள், பல்வகைப் பண்புப்பெயர்கள், கை கால் முதலிய சினைப்பெயர்கள் ஆகிய இவை, இயற்கையான வடிவிலும் வேர்ப்பொருள் தாங்கியும் எம்மொழியிலுள்ளனவோ, அம் மொழியே அதற்குத் தாய் எனத் துணிதல் வேண்டும்.

ஆரியவெழுத்துப்போல் எடுத்தும் உரப்பியும் ஒலிக்கும் மூச்செழுத்துகளும் ஓசையெழுத்துகளும் (ASPIRATED AND VOICED LETTERS) தமிழுக்கின்மையின் தமிழுக்குரிய பொது வெழுத்துகளாலேயே பெரும்பாலும் பிற திரவிடச்சொற்கள் காட்டப்பட்டுள்ளன. பிற திரவிட மொழிகளிலுள்ள தமிழ்ச் சொற்களையெல்லாம் எடுத்தெழுதின் பல அகராதிகளாக விரியுமாதலின், எடுத்துக்காட்டுக்கு வேண்டிய அளவான சொற்களே இங்குக் காட்டப்படுகின்றன வென அறிக.

இந் நூலின் திருத்தம்பற்றிய கருத்துகளை அறிஞர் தெரிவிப்பின், அவற்றை நன்றியறிவுடன் ஏற்றுக்கொண்டு, அடுத்த பதிப்புகளிற் பயன்படுத்தும் வாய்ப்புடை யேனாவேன்.

"குணநாடிக் குற்றமு நாடி யவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்."
குற்றங் களைந்து குறைபெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்.

ஞா. தேவநேயன்,சென்னை,27-1-1944.

. 4.10.1957 ஆம் ஆண்டு சேலம் தமிழ்ப் பேரவையினர் பாராட்டு விழா நடத்திப் பாவாணருக்கும், பொன்னம்பலனாருக்கும் விரு துகள் வழங்கிச் சிறப்பித்துள்ளனர். இருவருக்குமான விருதுகள் மற்றும் பொற்கிழிகளைத் தந்தை பெரியார் வழங்கியுள்ளார். அவ்விழாவில், புரட்சிக் கவிஞர் பாரதிதாசனாரும் கலந்து கொண்டு பாராட்டுரை வழங்கியுள்ளார். பொன்னம்பலனாருக்கு அன்று வழங்கப்பட்ட பட்டம்தான் "தமிழ் மறவர்" என்பது. இச்செய்திகள் அனைத்தும், பாவாணரின் இளைய மகனார் மணி என்ற தே.மணிமன்றவாணன் எழுதியுள்ள, பாவாணர் நினைவலைகள் (பக்.197) என்னும் நூலில் உள்ளன. **அறிஞர் பாவாணருக்கு அன்று வழங்கப்பட்ட பட்டம் திராவிட மொழிநூல் ஞாயிறு என்பதுதானே அன்றி மொழி ஞாயிறு என்பதன்று**. இனி நாம் பாவாணரைக் குறிப்பிடும்போதெல்லாம் திராவிட மொழிநூல் ஞாயிறு என்றே எழுதுவோம். சுருக்கம் தேவைப்படின் திராவிட ஞாயிறு என்போம்.- தேவநேய பாவாணர் நினைவு நாள் (சன. 15)சிந்தனை- விடுதலை ஞாயிறு மலர், 11.1.20

## தேவநேயப் பாவாணரின் 'திருக்குறள் தமிழ் மரபுரை'யின் தனிச் சிறப்பு



===பேராசிரியர் முனைவர் மு.முத்துவேலு

மேனாள் பதிவாளர்,

செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம்,

சென்னை.

தமிழ் இலக்கிய வரலாற்றில் தனியொரு நூலைப் புகழ்ந்து பாடப்பெற்ற பாடல்களின் தொகுப்பாக அமைந்த நூல் திருவள்ளுவ மாலை ஆகும்.இந் நூலில் புலவர்கள் பலரும் திருக்குறள் பற்றித் தத்தம் கருத்துகளைப் பதிவு செய்துள்ளனர்.

அவர்களுள் மாங்குடி மருதனார் திருக்குறளின் இயல்பினைப் பாடும் போது, அது

"ஓதற்கு  எளிது உணர்தற்கு அரிது"

என்று சுட்டிக் காட்டியுள்ளார்.ஆம்! திருக்குறள் பாக்கள் படிப்பதற்கு எளிதாக இருக்கின்றன.ஆனால் அவற்றின் உட்பொருளை உணர்ந்து கொள்வது அரிதான செயலாகும்.

எனவே தான் திருக்குறளின் உட் பொருளை உணர்த்தும் முயற்சியில் உரையாசிரியர்கள் தொன்றுதொட்டு முயன்று வருகின்றார்கள்.

அவ்வகையில் திருக்குறளுக்கு உரைசெய்த பழைய உரையாசிரியர்கள் பதின்மரில் பரிமேலழகர் போற்றப்படுகிறார்.

ஆனால் பரிமேலழகர் பல இடங்களில் திருக்குறளில் வெளிப்படும் வள்ளுவரின் உள்ளக் கருத்தை அறிய முற்படாமல், தனது உட்கிடக்கையைக் குறள் மீது ஏற்றி வைத்து எடுத்துச் சொல்லியிருக்கிறார் என்பர்.

பரிமேலழகர் செய்த உரைக்குப் பின்னர் வந்த உரையாசிரியர்கள் அங்கங்கே மறுப்புத் தெரிவித்திருக்கின்றார்கள்.

அவ்வகையில்,பரிமேலழகர் உரையில் சிலவற்றை மறுத்து எழுத வேண்டும் என்ற நோக்கில் எழுதப்பட்ட உரையாக இருப்பது தான்

மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணர் எழுதிய திருக்குறள் தமிழ் மரபுரை என்பதாகும்.

பாவாணர் தம் நூலின் முகவுரையில் இக் கருத்தினைத் தெளிவாக் குறிப்பிட்டுள்ளார்.

“ சில குறள்கட்கு ஏனையுரையாசியர் காண முடியாத உண்மைப் பொருளைப் பரிமேலழகர் நுண்மையாக நோக்கிக் கொண்டுள்ளார் என்பதும், உண்மையே.

ஆயினும்,அறுசுவையரசவுண்டியில் ஆங்காங்குக் கடுநஞ்சு கலந்து படைத்துள்ள தொப்ப,உண்மைக்கு மாறானதும் தமிழுக்குந் தமிழர்க்குங் கேடு பயப்பதுமான ஆரிய நச்சுக் கருத்துக்களை முதலும் இடையும் முடிவுமாக நெடுகிலும் குறிக்கோளாகக் கொண்டு புகுத்தியிருப்பது,இவ்வுரையை நடுநிலையுடன் நோக்கும் எவர்க்கும் புலனாகாமற் போகாது.இனி,சில குறள்கட்கு முழுத் தவறாகவும் சில குறள்கட்கு அரைத்தவறாகவும் பொருள் கூறியுள்ளார்.சில சொற்கட்குத் தவறான இலக்கணவமைதியும் கூறியுள்ளார்.”

பரிமேலழகர் வழுவியுள்ள வழிகள் என பாவாணர் பின்வருமாறு சுட்டிக்காட்டுகிறார் .




அவை,

1.ஆரிய வழி காட்டல்

2. பொருள் இலக்கணத் திரிபு.

3. ஆரிய வழிப் பொருள் கூறல்

4. ஆரியக் கருத்தைப் புகுத்துதல்.

5. தென்சொல்லை வடசொல் மொழிபெயர்ப்பு எனல்

6.தென்சொல்லுக்கு வடமொழிப் பொருள் கூறல்

7. சொற் பகுப்புத் தவறு

8. சொல் வரலாற்றுத் தவறு

9.சொற்பொருள் தவறு

10. அதிகாரப் பெயர் மாற்று

11. சுட்டு மரபறியாமை

12 இரு குறளைச் செயற்கையாக இணைத்தல். என்பன.

இவற்றை எல்லாம் சுட்டிக் காட்டியுள்ள பாவாணர் “பரிமேலழகரால் ஒரு பெரு நன்மையும் உண்டு என்று குறிப்பிடுகிறார்.அவர் உரையின் தொடர்பால் திருக்குறள்

இதுவரை அழிக்கப் படாது இருந்ததே என்க.அது எதைப் போல எனின் முதலிரு கழகத்தும் வழங்கிய இயற்றமிழ் இலக்கணம் முழுவதும்,அதன் தொகுப்பாசிரியராகிய தொல்காப்பியர், தொல்காப்பியம் என்னும் பிண்ட நூலால் போற்றப் பட்டு வந்திருப்பது போன்று என்க " என்ற கருத்தையும் பதிவு செய்யத் தவறவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது ஆகும்.

தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பொய்யெனப் பெய்யும் மழை
(எண் 55)

என்னும் குறளுக்குப் பாவாணர்,

கற்புடைய பெண் பெய் என்று சொன்னவுடன் மழை பெய்யும் என்னும் மரபு வழி உரையை ஏற்று,அது ஒருகால் வள்ளுவர் குறள் பண்டைக் காலத்து ஒரு பத்தினிப் பெண் செய்த இறும்பூதை(அற்புதத்தை) அடிப்படையாகக் கொண்டதாகவும் இருக்கலாம் என்று பதிவு செய்துள்ளார்.அத்துடன் புரட்சிப் பாவலர் பாரதி தாசனார், "கொழுநன் தொழுதெழுவாள் பொய்யெனப் பெய்யும் மழைக்கு ஒப்பானவள் என்று பொருள் கூறிப் பொருத்தமாக்குவார்"என்பதையும் தம் உரையில் வலியுறுத்திச் செல்கிறார்.

**பின்னிணைப்பு**

பாவாணர் உரையுடன் காணப்படும் பின்னிணைப்பு மிகவும் குறிப்பிடத்தக்கதாகும். அதில் வடநாட்டுச் சொல்,தமிழ்த்திரி சொல்,மேலை ஆரியச் சொல் என்ற தலைப்புகளில் ஆய்வுக் கருத்துக்கள் இடம் பெற்றுள்ளன.இதில் மிகவும் சிந்திக்கத் தூண்டுவது "திருக்குறளுக்கு வடசொல் தேவையின்மை" என்னும் தலைப்பில் அவர் தெரிவித்திருக்கும் கருத்துக்கள் ஆகும். பாவாணர் திருவள்ளுவ மாலையில் காணப்படும் பாடல்களுக்கும் உரை எழுதித் தம் கருத்தைப் பதிவு செய்துள்ளார். மேலும் இக் காலத்திற்கு ஏலாத திருக்குறட் கருத்துக்கள் என்னும் தலைப்பில் அவர் குறிப்பிட்டுள்ளது சிறப்பாக அமைந்துள்ளது..

பாவாணரின் திருக்குறள் மரபுரை தமிழ் மரபு வழி நின்று திருக்குறளை அணுகி ஆராய்ந்து தெளிவதற்கு வழிவகுக்கிறது என்று கூறுவது பொருத்தம் உடையதாக இருக்கும்.

பாவாணரும் இலக்குவனாரும் உழுவலன்பும் கெழுதகை நட்பும் பேணியவர்கள் பாவாணரின் ஆங்கிலநூல் இலக்குவனாரின் தலைமையில் அவருடைய ஆய்வுப்பொழிவுடனே வெளியிடப்பெற்றது.தியாகராசர் கல்லூரியிலும் மாநிலக் கல்லூரியிலும் தாம் பணியாற்றிய காலத்தில் பாவாணரை அழைத்துப் பொற்கிழி வழங்கும் நிகழ்ச்சியை நடத்தியவர் இலக்குவனார்.அவர் பணிநீக்கம் செய்யப்பெற்ற வேளையிலெல்லாம் பாவாணர் ஒருவரே வெகுண்டெழுந்து கண்டனம் தெரிவித்தார்.

# அகிலம் போற்றும் எழுத்தாளர் அகிலன்




கரூர் வழக்கறிஞர் தமிழ் இராசேந்திரன் அவர்கள் ஓயாது தமிழ்நலன் காக்க உழைத்துவரும் ஒப்பற்ற தமிழ்த்தொண்டர் எனில் மிகையாகாது.கோயில்களில் தமிழ் வழிபாடு நிகழ்த்துதற்குரிய உரிமையைத் தமது இடைவிடாத உழைப்பாலும் தாம் தொடுத்த வழக்குகளாலும் போராடிப் பெற்றுத் தந்த பெருமகனார்.

இன்றைய தமிழ்நாடு மறந்துவிட்ட ஆளுமைகளைத் தொடர்ந்து நம் இதழ்தோறும் அறிமுகப்படுத்தும் பணியை ஏற்றுள்ளார்.மகிழ்ச்சி.



அகிலன் (Akilon) என்று அகில உலகும் அறிந்த பெருங்காளூர் வைத்தியலிங்கம் அகிலாண்டம் (பி. வி. அகிலாண்டம் ) அவர்களின் நினைவு நாள்--சனவரி 31 (1988) ஆகும். தமது பெயரை அகிலன் என்ற புனைபெயர் ஆக்கிக் கொண்ட இவர் ஒரு தனித்தன்மை வாய்ந்த தமிழ் எழுத்தாளர் ஆவார்.

நடப்பியல் சார்ந்த ஆளுமை மேம்பாட்டை உருவாக்கும் எழுத்து நடைக்குப் பெயர் பெற்றவராக அகிலன் திகழ்கிறார். இவர்ஒரு விடுதலைப் போராட்ட வீரரும் ஆவார்.

சிறப்புப் பெற்ற புதின ஆசிரியராக, சிறுகதையாளராக, நாடகாசிரியராக, சிறுவர் நூலாசிரியாராக, மொழிபெயர்ப்பாளராக, கட்டுரையாளராக எனப் பன்முக ஆற்றல் வாய்ந்த எழுத்தாளர் என இவரைக் குறிப்பிடுதல் பொருந்தும்.

அகிலன் 1922 ஆம் ஆண்டு சூன் மாதம் 27 ஆம் நாள் எங்கள் கருரில் பிறந்தவர் என்ற பெருமை எங்களுக்கு உண்டு.எனினும் இவர் வளர்ந்ததும் தொடக்கக் கல்வி கற்றதும் புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ள பெருங்காளூர் என்னும் இவரின் பூர்வீக ஊரில்தான்.

அங்கு இவரது தந்தை வைத்தியலிங்கம்பிள்ளை .ஒரு கணக்கு அலுவலர் ஆவார்.
தம்முடைய ஒரே மகன் அகிலன் மீது அவர் அளவுகடந்த அன்பு கொண்டிருந்தார்.
எதிர்பாராவிதமாக அகிலன் தம்முடைய சிறு வயதிலேயே தந்தையை இழக்க நேர்ந்தது.
ஆனால் அவரது தாயார் அமிர்தம்மாள் ஓர் அன்பான அன்னையாகத் தம் மகனை
எழுத்தாளராக  வடிவமைத்தார்.

பள்ளி நாட்களில் அகிலன் காந்திய தத்துவத்தால் பெரிதும் ஈர்க்கப்பட்டார், சுதந்திரப்
போராட்டத்தில் களமிறங்க வேண்டும் என்பதற்காகப் புதுக்கோட்டையில் தம்முடைய
கல்லூரிப் படிப்பைத் தியாகம் செய்தார்.

இந்தியா விடுதலை அடைந்த பின்னர் அவர் தொடர்வண்டி
அஞ்சல் சேவைப்பிரிவில் (RMS) பணியில் சேர்ந்தார், முழு நேர எழுத்தாளர்
ஆவதன் பொருட்டு, தமது பணியைத் துறந்தார்;முழுநேர எழுத்தாளராக
எழுத்துப் பணியில் ஈடுபட்டார். தொடக்கத்தில் இவர் எழுதிய கதைகள்
பெரும்பாலும் கலைமகள் இதழில் வெளியாயின.

கலைமகள் இதழின் ஆசிரியர் கி.வா.சகந்நாதன்  பரிந்துரையின் பேரில்
அகில இந்திய வானொலியில் பணியிலமர்ந்தார். பின்னர் பல முன்னணி
இதழ்களில் சமூக நவீனங்களும் வரலாற்றுப் புதினங்களும் கதைகளும் எழுதிக் குவித்தார்.
இவரின்

1.பாவை விளக்கு

2. வாழ்வு எங்கே? (குலமகள் ராதை)

3. கயல்விழி ( மதுரையை மீட்ட சுந்தரபாண்டியன் )

ஆகியவை திரைப்படங்களாக்கப்பட்டன.

அகிலன் எழுதிய சித்திரப்பாவை என்ற புதினம்1975 ஆம் ஆண்டிற்கான மதிப்பு மிக்க
ஞானபீடவிருதை வென்றது. இந்நாவல் அனைத்து  இந்திய மொழிகளிலும்
மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

இவர் எழுதிய வேங்கையின் மைந்தன் என்ற வரலாற்றுப் புதினத்திற்கு இந்தியஅரசாங்கம்
வழங்கும் தமிழுக்கான சாகித்திய அகாதமி விருது கிடைத்தது.

‘எங்கேபோகிறோம்’ என்னும் அரசியல் அங்கதப்புதினம் 1975 ஆம் ஆண்டில் இவருக்கு
ராஜா சர் அண்ணாமலை  விருதைப் பெற்றுத் தந்தது.

‘கண்ணான கண்ணன்’ என்ற இவர் எழுதிய குழந்தை நூலுக்கு தமிழக அரசின் கல்வித்துறை சிறப்புப்பரிசு வழங்கி சிறப்பித்தது.

மலேசியத் தமிழர்களின் தொடக்கக் கால வாழ்க்கையில் அவர்களுக்கு நேர்ந்த துன்பங்களை விவரிக்கும் புதினம் “பால்மரக்காட்டினிலே” இவரின் படைப்புகளில் குறிப்பிடத்தக்கது.

அகிலன் 45 தலைப்புகளில் பல்வேறு படைப்புகளை உருவாக்கியுள்ளார். இவற்றில் பெரும்பாலானவை இந்திய மொழிகள் அனைத்திலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. இவருடைய படைப்புகள் ஆங்கிலம், செருமனி, சீனம், மலாய் மற்றும் செக்கோசுலவேகியா ஆகிய அயல் நாட்டு மொழிகளிலும் மொழிப்பெயர்க்கப்பட்டுள்ளன.

தமது புதினங்களின் சிறப்புகளால் படைப்புலகில் தனி இடம் பெற்ற அகிலன் தமது 66 ஆம் அகவையில் 31. 1. 1988 இல் இயற்கை எய்தினார்.

ஜூன்,27,2021 இல் அவர் பிறந்த100 ஆம் ஆண்டு தொடங்கிற்று. 27-6-2022 இல் 100 ஆண்டு நிறைவுற்றது.இதனைச் சிறப்புடன் தமிழ் உலகு கொண்டாடாவிட்டாலும் அவரின் படைப்புகள் மூலம் தமிழர்கள் தங்கள் இதயங்களில் வைத்துக் கொண்டாடிக்கொண்டிருக்கிறார்கள்.

## வாசகர் வாய்மொழி

அருமை...சிறப்பு ஐயா

சென்னையில் அயலகத்தமிழர் தின மாநாட்டில் கலந்து விட்டு தாமதமாக மும்பை திரும்பியதால் தாமதமாகப் பதிவிடுகின்றேன்.1/1/2024,16/1/2024 நாள்களில் வெளியாகிய இரண்டு இதழ்களுமே படித்து அறிவதற்கான சிறப்பான தகவல்களைக் கொண்டுள்ளன.-**வதிலை பிரதாபன்,தலைவர்,மராத்திய மாநிலத் தமிழ் எழுத்தாளர் சங்கம்,மும்பை.**

தங்களது தந்தையார் புகழ் என்றென்றும் நிலைக்கும் வண்ணம் அவரது அயராத தமிழ்ப் பணி, தங்களது பங்களிப்பு ஆகியவை போற்றுதற்குரியன;பெருமைக்குரியன. மிக்க நன்றி அய்யா.

**பேராசிரியர் திலகவதி,ஆங்கிலத் துறை (பணிநிறைவு),சென்னை.**